நற்பல் தாமரை நாண்மலர்க் கையற்குஎன்
விற்புரு வக்கோடி தோற்றது மெய்யே' (திருவாய்-6. 6. 6.)

இத் திருப்பாவின் அடிகளில் இரண்டாம் எழுத்து ஒருவர்க்க மெய்யெழுத்துக்களே நிற்றலால் அம்மெய்யெழுத்துக்களை அளவாகக்கொண்டு எதுகையைத் தனி மெய்யெதுகை என்னல் போலவும்,

"குன்றனைய குற்றம் செயினும் *குணம்கொள்ளும்
இன்று முதலாக என்நெஞ்சே—என்றும்
புறனுரையே யாயினும் பொன்ஆழிக் கையான்
திறனுரையே சிந்தித் திரு." (முதற்றிரு 41.)

(இப்பாவின் முதலடி "குன்றனைய குற்றம் செய்யினும்* குணம் கொள்ளும்" என்பது முன்பாடம். அப்பாடம் பிழைப் பாடம். வெண்பாவிற்குரிய வெண்தளை தட்டாமையால். இப் பிழையைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர்.)

இத்திருப்பாவின் முதல் இரண்டு அடிகளிலும் தலைச்சீர் களில் அமைந்துள்ள மெய்யெழுத்துக்கள் ஒரே வர்க்க மெய் யெழுத்துக்களாக நிற்றலால் அவற்றை அளவாகக்கொண்டு-பிரமாணமாகக் கொண்டு-தனி மெய்யெதுகை என்னல் போல வும், பின் இரண்டு அடிகளிலும் தலைச்சீர்க்ளில் அமைந்துள்ள, உயிர் மெய் எழுத்துக்கள் ஒரே வர்கக உயிர் மெய் எழுத்துக் களாக நிற்றலால் அவ்வுயிர் மெய் எழுத்துக்களை அளவாகக் கொண்டு தனி உயிர் மெய் எதுகை என்னல் போலவும்,

"பீடுடை நான்முக னைப்படைத் தானுக்கு
மாடுடை வையம் அளந்த மணாளற்கு
நாடுடை மன்னற்குத் தூதுசெல் நம்பிக்குஎன்
பாடுடை அல்குல் இழந்தது பண்பே" (திருவாய்-6. 6. 4)

இத்திருப்பாவின் அடிகளில் இரண்டாம் எழுத்து ஒரு வர்க்க உயிர்மெய் எழுத்துக்களே நிற்றலால், அவ்வுயிர்மெய்யெழுத் துக்களை அளவாகக்கொண்டு எதுகையைத் தனி உயிர்மெய் யெதுகை என்னல் போலவும்,

"மனமாசு தீரும் அருவினையும் சாரா
தனமாய் தாமேகை கூடும்—புனமேய
பூந்துழா யான்அடிக்கே போதொடு நீரேந்தித்
தாந்தொழா நிற்பார் தமர் *" (முதற்றிரு-43.)

(இப்பாவின் ஈற்றுச்சீர் "தமக்கு"* என்று இருப்பின்வினைமுடிபு சிறக்கும். இச்சிறப்பை உணர்ந்திலர் தீபிகை உரைகாரர்—தமர் என்ற பாடம் பிழையுற்ற பாடமே.)

இத்திருப்பாவில் முதல் இரண்டு அடிகளிலும் தலைச்சீர்களில் அமைந்துள்ள உயிர்மெய்யெழுத்துக்கள் ஒரே வர்க்க உயிர்மெய் எழுத்துக்களாக நிற்றலால் அவற்றை அளவாகக் கொண்டு தனி உயிர்மெய்யெதுகை என்னல் போலவும்,

"ஆலத் திலையான் அரவின் அணைமேலான்
நீளக் கடலுள் நெடுங்காலம் கண்வளர்ந்தான்
பாலப் பிராயத்தே பார்த்தற் கருள்செய்த
கோலப் பிரானுக்கோர் கோல்கொண்டுவா
குடந்தைக் கிடந்தாற்கோர் கோல்கொண்டுவா" (பெரி. 2-6-6)

இத்திருப்பாவின் முதல் இரண்டு அடிகளிலும் அமைந்துள்ள லகர ளகரங்களை அளவாகக் கொண்டு அவற்றை ஓரின உயிர் மெய் எதுகை என்னல் வேண்டும் எனத் துணிக. மற்று,

"கோல மலர்ப்பாவைக்கு அன்பாகிய என் அன்பேயோ
நீலவரை இரண்டு பிறைகவ்வி நிமிர்ந்தது ஒப்பக்
கோலவராகம் ஒன்றாய் நிலம் கோட்டிடைக் கொண்ட எந்தாய்
நீளக்கடல் கடைந்தாய் உன்னைப் பெற்று இனிப் போக்குவனோ"
(திருவாய். 10-10-7.)

இத் திருப்பாவிலும் பின் இரண்டு அடிகளின் எதுகையும் ஓரின உயிர்மெய்யெதுகை என்னற்பாலதே.

இவ்வேதுக்களால் பாக்களின் தலைச் சீர்களில் இரண்டாம் எழுத்துக்கள் உயிர்மெய்யெழுத்துக்களாக இருப்பின் அவ்வுயிர்கள் ஒரே உருவினவாக இருக்க அவை ஏறிய மெய்யெழுத்துக்கள் ஒரு வர்க்கம் அல்லது ஓரின மெய்யெழுத்துக்களாக இல்லாமல் வேறு வேறு இனமாக அதாவது வல்லினத்துக்கு இடையினமும் மெல்லினமும், இடையினத்துக்கு மெல்லினமும் வல்லினமும் ஆகக் கலந்திருந்தால் அம்மெய்கள்மீது ஏறிய உயிரை அளவாகக் கொண்டு உயிர் ஒன்றிய உயிர் எதுகை எனவும், பாக்களின் அடிகளின் தலைச்சீர்களில் இரண்டாம் எழுத்துக்கள் ஓரின மெய்யெழுத்துக்களாக அதாவது லகரத்துக்கு ளகரமும், ளகரத்துக்கு லகரமும் ஆகமாறி நிற்க, (அம்மெய்களின் மீது ஏறிய உயிர் எழுத்துக்கள் ஒரே உரு

வினவாக இருப்பின்) அவ்வுயிர்மெய்யெழுத்தை அளவாகக் கொண்டு அவ்வெதுகை உயிர் மெய் இன எதுகை என்னற் பாலது எனத் துணிக. இப்பெயரை உரை ஆசிரியர்கள் உய்த்துணர வைத்திருத்தலை அவர்களால் காட்டப்பட்ட காட்டுக்களைக் கண்டு தெளிக. நிற்க.

மற்று, பண்டைய உரை ஆசிரியன்மார் யாவரும் ஒருவர்க்க-ஒருவகை—மெய்யெழுத்துக்களால் ஆம் எதுகைகட்கு உதாரணங்களைக் காட்டி வைத்தார்கள் அல்லாமல், அவர்கள், ஒருவர்க்க—ஒருவகை—உயிர் மெய்யெழுத்துக்களால் ஆம் எதுகைகட்கு உதாரணங்களைக் காட்டி வைத்திலர். அவர்கள், ஒருவர்க்க உயிர்மெய் எழுத்துக்களால் ஆய எதுகை உயிர் மெய் எதுகை என்னற்பாலது என்பதனை உய்த்துணர வைத்தார்கள். உரை ஆசிரியன் மாரால் அடி எதுகைகட்குக் காட்டப்பட்ட காட்டுக்களை நினைக்க. (அவர்களால் உய்த்துணர வைக்கப்பட்ட பெயரையே அவர்களின் பிற்கால ஆசிரியன்மார் யாவரும் நேரியபெயராகக் கொண்டு வழங்கி வருகிறார்கள் என்பதனை நினைக்க.) அதுபோலவே இன மெய்யெழுத்துக்களால் ஆம் எதுகைகட்குக் காட்டுக்களைக் காட்டிவைத்து ஓர் இன உயிர்மெய்யெழுத்துக்களால் ஆம் எதுகை உயிர் மெய் இன எதுகை என்னற்பாலது என்பதனையும் உய்த்துணர வைத்தார்கள் பண்டைய உரையாசிரியர்கள் எனத்தேறுக. இவ்வேதுக்களால் ஆறுவது ஆய்வு உரை உள்ளும் பிறஇடத்தும் என்னால் இனஎதுகை என்று சொல்லப்பட்ட பெயரே பண்டைய உரையாசிரியன்மாரால் கொள்ளப்பட்ட நேரிய பெயர் என்பது என் நம்பிக்கை என்க. தனிமெய் இன எதுகை, உயிர்மெய் இன எதுகை, என்னாமல் (வகையைப் பிரிக்காமல்) இன எதுகை என்னல் குறுக்கப் பெயர் கூறுதல் பொருட்டு எனத் தேறுக. நிற்க.

திருத்தங்கள் முற்றுப் பெற்றன.

வே. மு. ஸ்ரீ.

